





உ

ஸ்ரீபிரஹன்நாயகிதுணை.

# கும்பகோணம்
# ஸ்ரீநாகேஸ்வரஸ்வாமிகோவில்
# கும்பாபிஷேகத் திருப்பணி
# தருமம் செய்துவரும்,

ஸ்ரீலஸ்ரீ. மகான் பாடகச்சேரி
இராமலிங்கஸ்வாமி அவர்களின்

# மகத்துவக் கீர்த்தனை

இதில் ஸ்ரீநாகேஸ்வரர், பெரியநாயகி,
நடராஜர், சுப்ரமண்யர் தோத்திரக்
கீர்த்தனைகளும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

இஃது
இந்நகர்வாசிகளில்
அநேகருடைய வேண்டுகோளுக்கிணங்கி,
கும்பகோணம் பேட்டைதெரு ஸ்திரீபார்ட்டு
C. S. நடேசப் பத்தர் இயற்றியது.

ஸ்டார் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்று,
விலை] ரிஜிஸ்டர் செய்யப்பட்டது. [அ. 1
இப்புஸ்தகம் வேண்டியவர்கள் பேட்டைத்தெரு,
மௌனசுவாமி வளைவிற்கு கீழ்ப்பக்கம்
40-நெ. வீட்டில் பெற்றுக்கொள்ளலாம்.



# அறிவிப்பு.



நாளது ருத்திரோத்காரி-ஹு ஆனிமீ 17உக்கு (1-7-23) ஞாயிற்றுக்கிழமை கும்பகோணம் ஸ்ரீபெரிய நாயகி சமேத ஸ்ரீநாகேஸ்வரஸ்வாமிக்கு நடக்கும் மஹா கும்பாபிஷேக விசேஷத்தைப்பற்றிய பாடற் புஸ்தகம் ஒன்று அச்சிலிருக்கிறது கூடிய சீக்கிரம் வெளிவரும்.

நிற்க இப்புஸ்தகம் கொஞ்சங்காபிகளே அவசரத்திற்கு அச்சிடப்பட்டிருக்கிறது.

C. S. நடேசப் பத்தர்,

பேட்டைத்தெரு, கும்பகோணம்.



1013
2-1923

உ

ஸ்ரீபிரஹன்நாயகிதுணை.

# ஸ்ரீலஸ்ரீ. மகான் பாடகச்சேரி,
# இராமலிங்கஸ்வாமிகளின்

# மகத்துவக் கீர்த்தனை.

## விநாயகன் காப்பு.

திருவு தித்திடு பாடகச் சேரியில்
வருரா மலிங்க மகத்துவ வள்ளலின்
பெருமை யிற்சில பேசத் துணைசெயும்
அருமை யுற்றிடு மைங்கரன் றாளரோ.

## காந்திமகான்போலுண்டோ—என்னும் வர்ணமெட்டைத்தழுவியது.

பல்லவி.

மஞ்சுகுழல் வஞ்சியே மடமானே தேனே
மதியா அபரஞ்சியே மடமானே தேனே (மஞ்சு)

அநுபல்லவி.

வரிசைக்குயிலே வனசத்தளிரே
சரசக்கிளியே இரசக்கனியே (மஞ்சு)

மகத்துவத்துடன் எடுத்துரைக்கிறேன்
திருக்குடந்தையில் நடக்கும் விந்தையை (மஞ்சு)

சரணங்கள்.

பஞ்சம் பரவாத பூமி பாடகச்சேரிஸ்வாமி
நஞ்சாடு நாதனுக்கு—நாடித் திருப்பணித்
தேடிச் செய்விக்கின்றார் (மஞ்சு)

சூரியன் பூஜைசெய்யும் சுந்தர நாகேஸ்வரர்க்கும்
பேர்பெரிய நாயகிக்கும்—பிரபல கும்பாபி
ஷேகம் செய்யவே (மஞ்சு)

ராமலிங்கசுவாமி என்னும் நாமம் புனைந்த மகான்
நேமந்தவறாத சைவ—நிரணயங்கற்றார்
அருணையம் பெற்றார் (மஞ்சு)

உண்டிகட்டி யாசிக்கிறார் உண்மை உபதேசிக்கிறார்
வண்டிகட்டிப் பிடியரிசி—வாங்கி நித்திரை
நீங்கி நிற்கிறார் (மஞ்சு)

கீழ்க்கோட்டத்தான் தருமம் மேற்போட்டுக்கொண்டு செய்ய
ஆள்கூட்டங் கூடுமென்று—அங்கங்கு நின்றுப்ர
சங்கங்கள் செய்கின்றார் (மஞ்சு)

காத்தோட்டம் உள்ளமட்டும் கூத்தாட்டம் போடுகின்றீர்
சேத்தாட்டும் காலனிடம்—செல்லாமுன்னம் அறம்
எல்லாம்செய்யுமென்பார் (மஞ்சு)

கோபுரங்கள் வன்னம்வைத்தார் கோலமதிள் சுன்னம்வைத்தார்
தூபிகளைத் திலக்கிவைத்தார்—சுற்றுக்கோவில்களை
முற்றும்புதுப்பித்தார் (மஞ்சு)

சிங்கக்கிணர் சீர்படுத்திக் கங்கைக்கிணறைத் திருத்தி
திங்கட்சடை தேவனுக்கு—திருப்பணி சுரு
சுருப்பாய் செய்கிறார் (மஞ்சு)

ஆநந்த நடேசர்சபை அடங்கலும் செப்பனிட்டார்
தினந்தெரியா ப்ரமுகர்—திரவியந்தர
துறவியாமிவர் (மஞ்சு)

கருமநோய் தீருதற்கு தருமந்தான் நல்லவழி
சிரமம்பாராமல் தாரும்—செங்கல் சுண்ணும்புக்கு
உங்கள்காசை என்பார் (மஞ்சு)

ஆண்டு ருத்திரோர்க்காரி ஆனிபதி னேழுதனில்
நீண்டொளிர் கும்பாபிஷேக—நிகழ்ச்சியே வெகு
புகழ்ச்சியாகுமே (மஞ்சு)



# ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் அரிய பெரிய மகிமைக்கும்மி.



கும்மியடிக்கலாம் வாருங்கடி கிழக்
கோட்டத்திலே வந்து சேருங்கடி
செம்மையாப் பாடகச்சேரி மகாத்மாவின்
சேதிகள் சொல்லி நற்கியாதியுடன்

ஒரு ரகஸியம் சொல்லுகிறேன் அதை
உண்மையென்றே நம்ப ஞாயமுண்டு
குருகடாக்ஷத்தால் இன்னுஞ்சில நாளில்
கும்பகோணத்தில் வெளியாகும்

வாக்கு மனதுக்கும் எட்டாதகாரியம்
வள்ளல் ராமலிங்க ஸ்வாமிசெய்கை
ஜாக்ரதையாகக்க வனித்தாலல்லாது
சாமான்யமாகத் தெரியாது



எத்தனையோகோடி சாமியார்கள்வந்து
இந்தக்குடந்தையிலே திரிந்தார்
எத்தனையோ சித்தர் எத்தனையோ கர்த்தர்
எத்தனை நாளோ குடியிருந்தார்

மந்திரமில்லை ஓர் மாயமில்லை இவர்
வார்த்தையிலேதும் உபாயமில்லை
சிந்தையை என்றும் சிவன்பாலிருத்தியே
செய்திடுவார்யோக நிஷ்டைதனை

இங்கிருப்பதுபோ லேயிருப்பார் வேறி
டங்களிலேயும்போய் சஞ்சரிப்பார்
அங்கங்கனுக்கிரகம் செய்திடுவார் வெகு
ஆச்சர்யமான திவர் செயல்கள்

ஏதோ ஓர் காரணத்தாலிவர் இங்ஙனம்
இத்தலந்தன்னில் வெளிக்கிளம்பி
சாதகமான அநேக சம்பவங்கள்
தான் செயவந்தவ ரென்றிடலாம்

புத்தம்புதிய சகாப்தம் ஒன்று இந்தப்
புண்ய சரீரத்தினுல் விளையும்
சித்தமெப்படியோ தெய்வத்திற்கன்ரே
தெரியுமிதை யாமறிவதெங்கு

அருட்பா பாடிய ராமலிங்கஸ்வாமி
அவர்களே இவ் வுருவாகி
திருப்பணி செய்யும் விருப்பமுற்ருரோ
திருக்குடந்தை நாகேஸ்வரர்க்கு

பன்முறையாகச் சமாதியாகி இவர்
பாரினிலே பூர்வ ஞானத்துடன்
கர்ம நிவாரண தர்மகயிங்கர்யம்
காவிரிதீரத்தில் செய்யவந்தார்

ருத்திரோர்க்காரி வருடத்திலே இந்த
நூதனவைபவக் காட்சிதனை
புத்தகமாக அச் சிட்டதுவு மொரு
புண்ணியமாகக் கருதினேனே.

---

## ஸ்ரீ நாகேஸ்வரர் துதி கீர்த்தனை.

### கைவிட்டால் எப்படி கடைத்தேறுவேன் என்றமெட்டு

பத்தரைமாத்துப் பசுந்தங்கமே பா
மார்த்த நாகலிங்கமே
சுத்த ஆதிசேடன் சூரியன் முதலாய்
மற்றைய தேவரும் வந்துவணங்கிடும் (பத்தரை)

மதியாத முத்தே நன் மாணிக்கமே ஒளி
மரகதமே வைரமே
இதிகாச வேதங்கள் யாவுங் கொண்டாடிடும்
எந்தையே நின்ருள் பணிந்தேன் தினந்தோறும் (பத்த)

தப்பாத அப்பர் தமிழ்ப்பா சுரம் திருத்
தாண்டகம் கேட்டவனே
துப்பார் திருப்பாதா தொண்டர்க்கருள் போதா
சோதிமயமாய்த் துலங்கும் தனிவேதா (பத்தரை)

பெரியநாயகி சமேதா பர
பிர்மானந்த நாத கீதா
அரியமறைக் காதா அண்டர் தொழும்பாதா
விரிபுனற் செஞ்சடைமேவும் நாகநாதா (பத்தனை)

# ஸ்ரீபெரியநாயகியம்மன் கீர்த்தனை.

## சுஜன ஜீவனு—என்றமெட்டு.

பல்லவி.

பெரிய நாயகி செய்த
பிழை எல்லாம் வகி அம்மா (பெரிய)

அநுபல்லவி.

திரிபுராந்தகி உயர் தேவி சாம்பவி
சிவசங்கரி பர சுந்தரி
சிம்மவாகனி அம்மா (பெரிய)

சரணம்.

குடந்தைக்கீழக் கோட்டத்தில்வளர்
குமரிபார்வதி பக்த
கோடிகள் துதி பாடிப்பணியும்
கோலப்பாரதி
கடந்த ஜென்மங்கள் தோறும்
கலந்த பாபங்கள்
கதிரவனெதிர் பனியென அத
முற அருள்புரி அம்மா (பெரிய)

# நடராஜர் துதி கீர்த்தனை.

## கொஞ்சம் சஞ்சலமா—என்றமெட்டு.

பல்லவி.

சாமி நான் மரவேன் என் (சாமி)
தஞ்சமென்றவரைக் கர்ாக்கும்
குஞ்சிதபாதந்தன்னை (சாமி)

சரணங்கள்.

மாமலர்க்கையன் மத்தளங்கொட்ட
தாமரைத்துய்யன் கைதாளந்தட்ட
பூமகள் நெஞ்சம் பூரித்துக்கிட்டப்
பொங்கு சிதம்பரமன்றுளே
நின்று நடம்புரிகின்ற என் (சாமி)

தும்புரு நாரதாதியர் தம்புரு வீணைகள் மீட்ட
கிம்புருடர் பல கின்னரர் இன்புறு கிண்கிணியாட்ட
உம்பர்குழாங்கள் கவிந்துலகெங்குமே சம்ரமங்காட்ட
ஒருக்காலை எடுத்தாடும்
மகத்தான திறத்தாய் என் (சாமி)

கலந்து காளியோடாடுமீசனே
கல ..சபைக்கு உகந்தவிலாசனே
நலந்தரும் சுந்தர நடராஜனே
ஞானவினோத மனோகர
மானஎன் தீனதயாபர (சாமி)



## முருகன் கீர்த்தனை.

### சுருட்டி இராகம்—ஆதிதாளம்.

சரவணபவ குக ஷண்முகசுந்தர சாமி சகாயம்
செய்ய இதுதானே பிராயம் (சர)

அரவணைதனில் துயில் அரிதிருமருகா
அமரரும் முநிவரும் அடிதொழும் முருகா
சாமி சகாயம் ஷண்முக சாமிசகாயம்
செய்ய இதுதானே பிராயம் (சர)

வினைப்பயன் எனைத்துடராமலே முந்த
தினைப்புனந்தனில் விருத்தராய் வந்திருந்த
சாமி சகாயம் ஷண்முக சாமிசகாயம்
செய்ய இதுதானே பிராயம் (சர)

சங்கரனுக்குபதேசித்த குருவே
சற்குண விற்பன கற்பகத்தருவே
சாமி சகாயம் ஷண்முக சாமிசகாயம்
செய்ய இதுதானே பிராயம் (சர)



தருமந் தலை காக்கும்.
புண்ணியம் பின் தொடரும்.

மங்களம்.